[24th January 1961

SRI A. A. RASHEED : Sir, from the statement placed on the table of the House it is found that 600 applications received in 1958 have not yet been disposed of by the City Improvement Trust. May I know the reason for not disposing of these applications?

THE HON. SRI R. VENKATARAMAN : It is due to want of houses.

*Teaching of Views*

* 134 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நம் மாநிலத்திலுள்ள ஆலயங்களில் ஓதுவதற்கு அவசியமான வேதங்கள், ஆகமங்கள், திருமறைகள் போதிப்பதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்திருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Long-term courses and short-term refresher courses are being run in several temples for the training of Oduvars, Archagas and others.

SRI A. VEDARATHNAM : ஆலயங்களில் பூஜைகள் எல்லாம் ஆகம முறைப்படி நடைபெற வேண்டும் என்று இருப்பதால், இதற்கான வசதி எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. எல்லா இடங்களிலும் இதற்கான பாடசாலைகளை ஏற்படுத்தி இம்மாதிரி ஆகம பாடசாலைகளில் தேறியவர்களுக்குத்தான் ஆலயங்களில் வேலை கொடுக்கப்படும் என்று முடிவு செய்தால் எல்லோரும் படிக்க முன் வருவார்கள். அதன் பின்னால் முறைப்படி பூஜை முதலியனவும் நடைபெறும். இதற்காக வேண்டிய நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன்வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த நோக்கத்துடன்தான் அநேக ஆலயங்களில் இம்மாதிரிப்பட்ட பாடசாலைகள் நடத்துவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்து பாடசாலைகள் நடைபெற்று வருகின்றன.

SRI K. R. NALLASIVAM : ஸார், இதே போல் பைபிளையும், குரானையும் கற்றுக்கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்து கொடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்து ஆலயங்களில் அங்குள்ள நிதியைக் கொண்டு ஆகம பாடசாலைகள் நடைபெற்று வருகின்றன. பைபிளையும், குரானையும் கற்றுக்கொடுப்பதற்கு அவர்கள் ஆலயங்களிலிருந்து நிதி ஒதுக்கிக் கொடுத்தால் அதற்கும் அரசாங்கம் ஏற்பாடு செய்து கொடுப்பதற்கு தயாராக இருக்கிறது.